# பகவத் பாதை

BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்



நினைவுப் பிரவாகம்

Volume : 3 | Issue: 11 | January 2017 | Annual Subscription Rs. 100/-
மலர் 3 | இதழ்: 11 | ஜனவரி 2017 | வருடச் சந்தா ரூ. 100/-



weblink

Sri Bagavath Mission

Flow with the Flow



"நான்" என்னும் நம் நினைவுகளின் யதார்த்த நிலை தற்காலிகமானதே. அது நிரந்தரமாக இருப்பதைப் போன்ற அனுபவத்தை ஏற்படுத்துவதுங்கூட ஒரு மயக்கமே. தோன்றுவதும் மறைவதும் தான் அதனுடைய யதார்த்தம். "நான்". என்பது கண நேரம் மட்டும் வெளிப்பட்டுள்ள ஒரு நினைவு மட்டுமே என்ற உண்மையை புரிந்து கொள்வது தான் நினைவுகளைப் பிரவாகமாக்கும்.

**- ஸ்ரீ பகவத்**






# ஆன்ம ஞான ரகசியம் (Tamil Book)



பக்கங்கள் 110 விலை ரூ. 60/-

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?

*For More Details*





31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This Book Designed By: **PRAKASH PRINTERS, Salem.**
Mobile : 9843786655


ஸ்ரீ பகவத் ஐயாவின் முதல் நூல் "ஆன்ம ஞான ரகசியம்". இதன் மூன்றாம் பதிப்பு தற்போது வெளிவந்துள்ளது. ஆன்மிகத்தில் மறைபொருளாக இருந்த உண்மைகளையும் மன இயக்கத்தின் எல்லா பரிமாணங்களையும் எளிமையாகப் புரிந்துகொள்ளும் வகையில் பகவத் ஐயா அவர்கள் இந்நூலில் வழங்கியுள்ளார்கள்.

இந்நூலில் "நான்" என்ற உணர்வின் உண்மை வெளிப்பாட்டை மிக எளிமையாகப் புரிந்து கொள்ளும் வகையில் விளக்கியிருக்கிறார்கள். இந்நூல் இதுவரை மனதின் தெரியாத இரகசியங்களைத் தெரிந்து கொள்ள நம்மை அழைத்துச் செல்லும் பயணமாகவே அமைந்துள்ளது. இந்நூலைப் படித்த பின்பு ஐயாவின் மற்ற நூல்களைப் படிக்கும் போது அதன் உண்மைத் தன்மை மாறாமல் நம்மால் முழுமையாகப் புரிந்து கொள்ள முடியும்.

"நோபல் பரிசுக்குத் தகுதியான
நூல் இதுவென்று இந்நூலைப்
படித்த பேரறிஞர்கள் பலரும்
கூறுகின்றனர்.

பரிசு கிடைக்கின்றதோ இல்லையோ,
நீங்கள் படித்துப் பாதுகாக்க வேண்டிய
நூல் இது என்பது மட்டும் உண்மை."

இதுவரை படிக்காதவர்கள் கண்டிப்பாகப் படிக்க வேண்டிய நூல்.
இந்நூலைப் படித்து, பயணித்து, பயனடைய அனைவரையும் அழைக்கிறோம்.





31, இராமலிங்க சுவாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் - 636003
செல் : 999420 5880, 97891 65555

# நினைவுப் பிரவாகம்

– ஸ்ரீ பகவத்

முல்லா நசுருதின் கதையைக் கேட்டிருப்பீர்கள்.

ஒருமுறை அவர் வீட்டில் மொட்டை மாடிக்குச் செல்ல வேண்டியது இருந்தது. ஏறுவதற்கு படிக்கட்டு இல்லாததால் ஏணியை எடுத்துக் கொண்டு போனார். அவர் போன கொஞ்ச நேரத்தில் யாரோ 'டம்' மென்று கீழே விழுந்த சப்தம் கேட்டது.

வீட்டுக்குள்ளிருந்த மனைவி கேட்டார், "என்ன சப்தம்?" என்று.

"எனது சட்டை கீழே விழுந்து விட்டது" என்று முல்லா பதில் கொடுத்தார்.

"சட்டை கீழே விழுந்தால் இப்படியா சப்தம் கேட்கும்?" என்று மனைவி கேட்டார்.

"துரதிஷ்டவசமாக அந்தச் சட்டைக்குள் நான் இருந்து விட்டேன்" என்று பதில் கொடுத்தார் முல்லா.

நம்மைப் பார்த்து ஒருவர் "நீங்கள் யார்?" என்று கேட்பதாக வைத்துக் கொள்வோம். நாம் என்ன பதில் கூறுவோம்?

"நான் ஒரு சிந்தனை" என்று கூறுவோமா?

முல்லா என்னை ஒரு சட்டை என்று கூறியதைப் போல் நிச்சயம் நாம் நம்மை ஒரு சிந்தனை என்று கூறி விட மாட்டோம்.

ஏனெனில் நமது சிந்தனையைப் பற்றி நமக்குத் தெரியும்.

ஒரு ஊதுவத்தியிலிருந்து புகை வந்து கொண்டிருப்பதைப் போல் சிந்தனையானது ஒன்றன்பின் ஒன்றாக வந்து கொண்டிருக்கிறது.

சினிமா காட்சியை நாம் பார்த்துள்ளோம்.

ஒருவர் உட்கார்ந்திருப்பதைப் போலவும், நடப்பதைப் போலவும் காட்டுவார்கள்.

ஒரு வினாடிக்கு 24 படங்கள் மாறுகின்றன. வினாடிக்கு 24 படங்கள் நகர்த்துவதன் மூலமாகவே ஒரு காட்சியை நம்மால் தெளிவாகப் பார்க்க முடிகிறது.

இப்படி ஒரு வினாடிக்கு 60க்கும் மேற்பட்ட நினைவுகள் நமக்குள் ஏற்படுகின்றன.

அப்படி ஏற்படும் நினைவுகள் தாம் ஒன்றன்பின் ஒன்றாகத் தெரியும் வகையில் நமக்குப் புலப்படுகின்றன. ஒரு வினாடிக்கு ஒரு நினைவு ஏற்படுவதைப் போன்று நமக்குத் தோன்றுகின்றது.

ஒரு வினாடிக்கு ஒரு சிந்தனை – நினைவு என்றே வைத்துக் கொள்வோம். அந்த நினைவுதான் நாமா?

ஊதுவத்தி என்பது என்ன?

ஊதுவத்தி தான் ஊதுவத்தியா அல்லது ஊதுவத்தியிலிருந்து வெளிப்படும் புகைதான் ஊதுவத்தியா?

எது ஊதுவத்தி?

புகையை ஊதுவத்தி என்று கூறுவோமா?

புகை வேறு; ஊதுவத்தி வேறு.

ஊதுவத்தியிலிருந்து வெளிப்படும் ஒரு வெளிப்பாடுதான் புகை.

புகை இல்லாவிட்டால் கூட ஊதுவத்தி இருக்கும். ஆனால் ஊதுவத்தி இல்லாத நிலையில் புகை இருக்காது.

ஊதுவத்திப் புகையைப் போல் நமக்கு நினைவுகள் ஒன்றன்பின் ஒன்றாக, அடுக்கடுக்காக வந்து கொண்டிருக்கின்றன.

ஊதுவத்திப் புகைக்கு ஊதுவத்தி ஆதாரமாக இருப்பதைப் போல்

நமது நினைவுகளுக்கு ஆதாரமாக எது இருந்து கொண்டிருக்கிறது.

மாறி மாறி – புதிது புதிதாக வரும் நினைவுகளுக்கு ஆதாரமாக இருக்கும்,

அந்த மாறாத உண்மை எது?

அந்த மாறாத உண்மைதான் ஆன்மாவா?

ஆன்மாவிலிருந்து தான் நமது

நினைவுகளெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக வந்து கொண்டிருக்கின்றனவா?

புகைக்கு ஆதாரமாக இருக்கும் ஊதுவத்தியைக் கண்டுபிடிப்பது நமக்கு எளிதாக உள்ளது.

ஆனால் நமது நினைவுகளுக்கு ஆதாரமாக இருக்கும்

அந்த ஆதாரப் பொருளைக் கண்டுபிடிப்பது, நமக்கு சற்றுக் கடினமாகத் தான் உள்ளது.

வெளி வந்த புகை உடனடியாக மறைந்து விடுகிறது ; இல்லாமல் போய் விடுகிறது.

அது போல் நமது நினைவும் மறைந்து போய் விடுகிறது.

புகையைப் போல் இல்லாமல் போய் விடுகிறது.

புதிய நினைவுகள் தோன்றுவதற்கு வாய்ப்பு கொடுத்து விட்டு பழைய நினைவுகள் அனைத்தும் மறைந்து விடுகின்றன.

சினிமா காட்சிகளில் பிலிம் ஓடும் போது ஏதாவது தடங்கல் ஏற்பட்டு விட்டால் சில காட்சிகள் அசையாப் புகைப்படம் (Still Photo) மாதிரி ஆடாது அசையாது அப்படியே நின்று போய் விடும்.

ஆனால் அப்படியொரு நிலை நமது நினைவுகளுக்கு என்றுமே ஏற்பட்டது கிடையாது.

-ஒரேயொரு நினைவு மட்டும் அசைவற்று நின்று போய் விடுவதில்லை.

ஒரே ஒரு சிந்தனையே இருப்பதாகத் தோன்றினாலும் கூட, அது கணத்துக்குக் கணம் புதுச் சிந்தனையாகவே வந்து கொண்டிருக்கிறது.

இப்படிக் கணத்துக்குக் கணம் புதிதாக வந்து செல்லும் சிந்தனையா நாம்?

நிச்சயமாக அதுவாக நாம் இருக்க முடியாது?

அப்படியானால் நாம் யார்?

நினைவுகளுக்கு ஆதாரம் ஆன்மா அல்ல. எந்த சிந்தனையும் ஆன்மாவிலிருந்து புறப்படுவதில்லை.

பிறகு எது தான் நமது நினைவுகளுக்கு - சிந்தனைகளுக்கு ஆதாரம்?

நமது உடலா?

நமது உடலின் ஒரு பகுதியான மூளையிலிருந்து தான் நமது மனம் செயல்படுகிறது.

அந்த மனதிலிருந்து தான் நமது நினைவுகள் ஒவ்வொன்றாக வெளிப்படுகின்றன.

அந்த மனது தான் நான் என்பதா?

மனதுக்கு ஆதாரமான உடல் தான் நான் என்பதா?

உடலோ, மனமோ கூட 'நான்' ஆக இருக்கலாம். ஆனால் அவற்றிலிருந்து வெளிப்படும் நினைவு மட்டும் 'நான்' ஆக இருக்க முடியாது.

தோன்றி மறையும் நிழல் எப்படி 'நான்' ஆக இருக்க முடியும்?

இப்போது நமக்கு ஒரு கேள்வி.

நமது நினைவுகள் நின்று விட்டன என்று வைத்துக் கொள்வோம். என்ன ஏற்படும்? என்ன ஆகும்?

அம்மையார் ஒருவர் தமது அனுபவத்தைக் கூறினார்.

"சிந்தனைகள் இல்லாமல் போய் விட்ட நிலையில் எனக்கு எதுவுமே தெரியவில்லை. மனதே இல்லாமல் போய் விட்டது. எனக்கு எந்த வேலையும் செய்யத் தெரியவில்லை. முருகனுடைய பாடல் ஒன்று டி.வி. யில் ஒளிபரப்பாகி கொண்டிருந்தது. அந்தப் பாடலுடன் சேர்ந்து நானும் வாய்விட்டுப் பாட ஆரம்பித்தேன். அப்படி பாடப் பாட என் மனம் வேலை செய்யத் தொடங்கி விட்டது. சிந்தனைகள் தோன்ற ஆரம்பித்து விட்டன. 'அப்பாடா' என்று இருந்தது எனக்கு"

-இப்படி அவர் தன் அனுபவத்தை கூறி முடித்தார்.

அவர் புரிந்து கொண்டதைப் போல் உண்மையில் அவர் மனம் முழுமையாகத் தனது வேலையை நிறுத்திக் கொண்டிருக்கவில்லை. அப்படி நிறுத்திக் கொண்டிருந்தால் நடந்த சம்பவம் கூட நினைவில் இருந்திருக்காது; பாடலோடு சேர்ந்து பாடியிருக்கவும் முடியாது. ஆனாலும் கூட அவருடைய அனுபவம் சற்று வித்தியாசமானது. சிந்தனையின் அளவு குறைந்து விட்டதால் ஏற்பட்ட விளைவு தான் அது.

நினைவுகள் இல்லா விட்டால் எதுவுமே இல்லை. எல்லாமே இருந்தும் கூட எதுவுமே இல்லாத நிலை தான் ஏற்பட்டு விடும்.

மின்சார பல்பிலிருந்து வெளிச்சம் ஏற்படுகிறது. வெளிச்சத்தில் அறையில் இருக்கும் அனைத்தும் புலப்படுகின்றன.

வெளிச்சம் என்பது பல்பு அல்ல. அது பல்பின் வெளிப்பாடு மட்டுமே.

பல்பு தான் ஆதாரம். அது தான் உண்மையான பொருள். அதுனுடைய வெளிப்பாடு தான் வெளிச்சம். அது தற்காலிகமானது; தோன்றி மறைய கூடியது.

பல்பிலிருந்து வரும் ஒளி நின்று போய்விட்டது. என வைத்துக் கொள்வோம்.

இப்போது எது இருக்கும்?

எல்லாமே இருக்கலாம்.

ஆனால் அறையில் உள்ள எதுவுமே தெரியாது. ஏன், அந்த பல்பு கூட நமக்குப் புலப்படாது. இப்படி நம் நினைவுகள் எல்லாம் ஒரு வெளிபாடு மட்டுமே. ஆனால் நினைவுகள் இல்லா விட்டால் எதுவுமே இல்லை.

மனம் இல்லை ; உடல் இல்லை ; உலகமே இல்லை. நமது நிஜ சொரூபம் ஆன்மாவாக இருக்கலாம்; நம் உடலாக இருக்கலாம்; நம் மனமாக இருக்கலாம்.

ஆனால் அவை எவையுமே தம்மை 'நான்' என்றுக் கூறிக் கொள்வதில்லை.

– தம்மை 'நான்' என்று புரிந்து கொள்வதில்லை.

நம்முடைய நினைவுகளுக்கு மட்டுமே தம்மை நான் என்று அறிந்து கொள்ளும் தன்மை உள்ளது.

நமது நினைவுகளுக்கு மட்டுமே, சேமித்து வைக்கப்பட்ட நினைவுக் குறிப்புகளை –Memory யைப் பயன்படுத்தும் தகுதி உள்ளது.

இன்றைய நிலையில்,

உடல் இல்லாமல் மனம் இல்லை. மனம் இல்லாமல் நினைவுகள் இல்லை.

ஆனாலுங்கூட நினைவுகளின் மூலமாகவே அனைத்தும் நிகழ்ந்திடுகின்றன.

யதார்த்தமான நிலையில்,

நடைமுறை உண்மையாக,

நினைவுகள் மட்டுமே உள்ளன.

அதுவே தனக்குள் அனைத்தையும் உள்ளடக்கிக் கொண்டுள்ளது. நினைவுக்குள்ளேயே, உடல், மனம், ஆன்மா ஆகிய அனைத்தும் அடங்கியுள்ளன.

"நான் ஆன்மாவாக இருக்கிறேன்".

"நான் பிரம்மமாக இருக்கிறேன்".

–இவையெல்லாம் என்ன?

ஆன்மா தன்னை ஆன்மா என்று கூறிக் கொள்வதில்லை. அது போல் பிரம்மமும் தன்னை பிரம்மம் என்று கூறிக் கொள்வதில்லை.

ஆனால் அப்படி யாரோ அல்லது எதுவோ கூறுமேயானால்

அப்படிக் கூறுவதும் நமது நினைவுகளேயன்றி வேறல்ல.

நினைவுகள் ஏன் தம்மை 'நினைவு தான்' என்று மட்டும் கூறிக் கொள்ளக் கூடாது?

பல்பிலிருந்து வந்த வெளிச்சம் தன்னை ஒளி என்று மட்டும் ஏன் கூறிக் கொள்ளக் கூடாது.

தன்னை ஏன் அது "நான் ஒரு நிரந்தரமான பல்பு" என்று கூறிக் கொள்ள வேண்டும்?

பல்பு தன்னை பல்பு என்றும் கூறிக் கொள்வதில்லை; ஒளி என்றும் கூறிக் கொள்வதில்லை.

நினைவுகள் அனைத்தும் தற்காலிகமானவை ; கணந்தோறும் புதியவை.

அவை ஏன் தம்மை 'நான்' அழிவற்ற ஆன்மா என்று கூறிக் கொள்ள வேண்டும்?

நமது ஆன்மிக சாஸ்திரங்களும் அதற்கு ஏன் அங்கீகாரமளிக்க வேண்டும்?

நினைவுகள் அனைத்தும் தம்மை அழிந்து போய்விடக் கூடிய ஒன்றாக நினைத்துப் பயந்து விடக்கூடாது என்ற நிலையில்,

நினைவுகளுக்கு ஆறுதலாக இவ்வாறு கூறுகின்றனவா?

உண்மையில் நம் நினைவுகள் எவையும், தாம் தற்காலிகமானவை என்றோ, கண நேரத்தில் இல்லாமற் போய் விடுவோம் என்றோ பயப்பட்டுக் கொண்டிருக்கவில்லை.

அவை யாவும் தம்மை சாஸ்வதமான–நிரந்தரமான ஒன்றாகவே கருதிக் கொண்டிருக்கின்றன.

உடலெடுத்துப் பிறந்தது முதல் தற்போது வரை தொடர்ந்து நீடித்துக் கொண்டிருக்கும் ஒரு நபராகவே அவை தம்மைக் கருதிக் கொண்டிருக்கின்றன.

"நமது நிஜ சொரூபம் ஆன்மா" என்ற கருத்து கொடுக்கப்பட்டதன் நோக்கமே,

நம் நினைவுகள் அனைத்தும் தற்காலிகமானவை என்பதை அறிவுறுத்தவே ஆகும்.

'நான்' என்னும் நம் நினைவுகளின் யதார்த்த நிலை தற்காலிகமானதே.

அது நிரந்தரமாக இருப்பதைப் போன்ற அனுபவத்தை ஏற்படுத்துவதுங்கூட ஒரு மயக்கமே.

தோன்றுவதும் மறைவதும் தான் அதனுடைய யதார்த்தம். அதனுடைய இயற்கை.

யதார்த்தமான உண்மையைப் பேசுவோமேயானால்,

'நான்' என்பது ஆன்மா அல்ல.

'நான்' என்பது உடல் அல்ல.

'நான்' என்பது மனம் அல்ல.

'நான்' என்பது கண நேரம் மட்டும் வெளிப்பட்டுள்ள ஒரு நினைவு மட்டுமே.

கண் சிமிட்டும் நேரத்தில் வந்து செல்லும் மின்னலைப் போல், தோன்றி மறையும் கண நேர உண்மையே நான்.

–கண நேர உண்மையே நினைவு.

இல்லாமற் போய் விடும் எனக்கு என்ன தேவை?

எதுவும் தேவை இல்லை.

எனக்கு ஏதாவது தேவைப்பட்டால், அந்தத் தேவைகளே என்னைத் தங்க வைத்து விடுகிறது; தேங்க வைத்து விடுகிறது.

ஆனால் தேக்கம் கூட அங்கே சாத்தியமில்லாததால் அது ஒரு தடுமாற்றத்தையே ஏற்படுத்தி விடும்.

நம்முடைய – நம் நினைவுகளுடைய நிரந்தமற்ற தன்மையை,

–நான் ஒரு நினைவு மட்டுமே ஆகும் என்ற யதார்த்தமான உண்மையை,

எளிமையான மனதுடன் ஏற்றுக் கொள்வது தான்,

உண்மையை ஏற்றுக் கொள்வதாகும்.

அதுதான் மாற்றத்தை எளிதாக்கும்.

–நினைவுகளைப் பிரவாகமாக்கும்.





V.A.P. சரவணன் (சேலம்)
செல் : 99942 05880



# கேள்வி? பதில்...

## வேலையில் நிறைவு இன்மை, நேரம் பற்றாக்குறை, எப்போதும் வேலையை பற்றிய பரபரப்பு... என்ன செய்வது?

**கேள்வி** : நான் ஒரு பயிற்சி மருத்துவர். நான் அரசு மருத்துவமனையில் வேலையில் இருக்கிறேன். என்னுடன் பல பயிற்சி மருத்துவர்கள் சேர்ந்து வேலை பார்க்கிறார்கள். உள் நோயாளிகளின் நோய் பற்றிய குறிப்புகளை எல்லாம் நான் தான் கம்யூட்டரில் பதிவு செய்கிறேன். என்னுடைய சீனியர் டாக்டர் (உயர் மருத்துவர்) நோயாளியைப் பற்றிய மருத்துவக் குறிப்பைக் கேட்கிறார். அப்படி அவர் கேட்கும் போது என்னால் சரியான தகவலைத் தர முடியவில்லை. அதனால் அவர் என்னைப் புறக்கணித்து விட்டு அடுத்த சகப் பயிற்சி மருத்துவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்கிறார். நான் மற்ற பயிற்சி மருத்துவர்களைக் காட்டிலும் கூடுதலாக வேலை செய்யும் படி ஆகிவிடுகிறது. நான் என்னுடைய வேலையை மெதுவாக செய்வதாக நினைத்துக் கொள்கிறேன். மற்றவர்கள் 15 நிமிடம் எடுத்துக் கொள்ளும் வேலைக்கு நான் 30 நிமிடம் எடுத்துக் கொள்கிறேன். இதனால் எனக்கு வேலை நேரம் எப்போதும் பற்றாக் குறையாகவே இருக்கிறது. எப்போதும் வேலையைப் பற்றியே தான் யோசித்துக் கொண்டு இருக்கிறேன். ஒரு சிறிய வேலை கூட மிகப் பெரிய விசயமாகத் தெரிகிறது. மனம் எப்போதும் அடுத்த, அடுத்த வேலைகளை முடிக்க வேண்டும், நேரம் போய்க் கொண்டே இருக்கிறது என்று பரபரப்பாகவே இருக்கிறது. எனக்குச் சரியாக சாப்பிடுவதற்கும், தூங்குவதற்கும் கூட நேரமில்லாமல் இருக்கிறது. ஆனால் என்னுடன் பணி புரியும் மற்ற பயிற்சி மருத்துவர்கள் எல்லாம் வேலையை முடித்து விட்டு ஓய்வு எடுத்துக் கொள்கிறார்கள். தளர்வாக இருக்கிறார்கள். நான் மட்டும் என்ன தவறு செய்கிறேன் என்று தெரியவில்லை. நான் மற்றவர்களைக் காட்டிலும் அதிகமான நேரம் வேலை பார்த்தும் வேலையிலும் ஒரு மனநிறைவு இல்லை. உயர் மருத்துவர்களிடம் ஒரு நல்ல பெயர் இல்லை. நான் என்ன தான் செய்வது? இந்தச் சூழ்நிலையை எப்படி நான் எதிர்கொள்வது?

**பதில்** : உங்களின் வேலை என்ன என்பதை நீங்கள் முதலில் தெளிவாக புரிந்து கொண்டு செயல்பட்டால் இந்தச் சூழ்நிலையைச் சுலபமாக எதிர்கொள்ள முடியும்.

பொதுவாக வேலை பார்க்கும் பலரும் இப்படிக் கூறுவதுண்டு. “நான் மற்றவர்களை காட்டிலும் அதிகமாகத் தான் வேலை பார்க்கிறேன் ஆனாலும் என்னை அங்கீகரிப்பதே இல்லை” என்று கூறுகிறார்கள். நம்முடைய வேலை என்ன என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். பிறகு நம்மிடமிருந்து உயர் அதிகாரி அல்லது நிர்வாகம் என்ன மாதிரி வேலையை எதிர்பார்க்கிறது என்பதைத் தெரிந்து கொண்டு செயல்பட வேண்டும். நாம் அந்த உயர் அதிகாரியின் பொறுப்பில் இருந்தால் தனக்குக் கீழே வேலை பார்ப்பவர்கள் எப்படி வேலை பார்க்க வேண்டும் என்று எதிர்ப்பார்ப்போமோ, அப்படி நாம் செயல் பட்டால் போதும், மாற்றம் தன்னாலே ஏற்பட்டுவிடும்.

வேலை பார்க்கும் நம்மையும், வேலை கொடுக்கும் நிர்வாகத்தையும் நாம் பிரித்துப் புரிந்து கொண்டால் போதும். நாம் வேலையில் இன்னும் கொஞ்சம் சிறப்பாகவும், நிர்வாகத்திற்கு ஏற்ற பணியாளராகவும் இருக்க முடியும். எப்பொழுதும் எந்த நிர்வாகமும் சிறந்த பணியாளரையே விரும்புகிறது. நிர்வாகம் எந்த மாதிரி தகுதிகளை வேலை பார்ப்பவரிடமிருந்து எதிர்பார்க்கிறது என்பதை நாம் புரிந்து கொண்டு அதற்கான தகுதிகளை வளர்த்துக் கொண்டு நிர்வாகத்தின் தேவையை நிறைவு செய்யும் போது நாம் சிறந்த பணியாளராக மாற்றமடைய முடியும்.

பொதுவாக வேலை பார்ப்பவர்கள் தனக்கு அந்த வேலை சம்பந்தமாக என்ன தெரியுமோ அதைச் செய்வதைத் தான் நிறுவனத்திற்காக வேலை செய்வதாக நினைத்துக் கொள்கிறார்கள். உங்களுடைய வேலை சம்பந்தமான சொந்தக் கருத்தினையோ, உங்களுக்குத் தெரிந்த விசயங்களையோ நிர்வாகம் எதிர்பார்க்கவில்லை. நிர்வாகத்திற்கு நல்ல லாபம் கிடைப்பதற்கு என்ன மாதிரியான செயல் தேவையோ அதையே உங்களிடம் எதிர்ப்பார்க்கிறது.

வேலையில் ஒரு நிறைவு இல்லாமல் இருப்பது, அடுத்தடுத்த வேலை சம்பந்தமாக பரபரப்பாக இருப்பது, எப்போதும் வேலை சம்பந்தமாக யோசித்துக் கொண்டே இருப்பது, சிறிய வேலையைக் கூட பெரிய பூதாகரமான விசயமாக எடுத்துக்

கொள்வது, வேலையை மெதுவாக செய்வதாக நினைத்துக் கொள்வது, சாப்பிடுவதற்கும், தூங்குவதற்கும் கூட நேரமில்லாமல் இருப்பது போன்றவை எல்லாம் நீங்கள் வேலைகளில் மனம் பொருந்தி, மனநிறைவாக செய்ய வில்லை என்பதைக் குறிக்கிறது. உங்களுடைய மனம் உங்களின் கட்டுப்பாட்டையும் மீறி வேலையில் கவனமின்றி தன்னிச்சையாகச் செயல்படுவதைத் தான் காட்டுகிறது. உங்களின் வேலை மனதின் கவனித்திற்கு வந்த பிறகு நிதானமாகவும் மன நிறைவாகவும், நிர்வாகம் என்ன எதிர்பார்க்குமோ அதற்குத் தகுந்தாற்போல் செயல்படத் துவங்குங்கள். காலப்போக்கில் கவனத்துடன் செயல்படுவது அதிகரிக்கும். வேலையில் ஒரு நிதானமும் நிறைவும் ஏற்படும்.

நாம் சிறுவயதில் படித்த ஒரு பள்ளிப் பாடத்தின் கதையை, உதாரணத்தைச் சிந்திப்போம். இரண்டு தொழிலாளிகள் காட்டில் மரம் வெட்டி வாழ்ந்து வந்தனர். அதில் ஒரு தொழிலாளி முதல் நாள் 20 மரங்களை 8 மணி நேரத்தில் பிளந்தான். அடுத்த நாள் 15 மரங்களை 10 மணி நேரத்தில் பிளந்தான். மூன்றாம் நாள் 10 மரங்களை 12 மணி நேரத்தில் பிளந்தான். நான்காம் நாள் 5 மரங்களைக் கூட 12 மணி நேரத்தில் பிளக்க முடியாமல் மிகுந்த கவலை கொண்டான். தனக்கு வலிமை குறைந்து கொண்டே போவதாக நினைத்துக் கொண்டான். கடுமையாக அதிக நேரம் உழைத்தும் பலன் இல்லையே என்று வருந்தினான்.

தன்னுடன் மரம் பிளக்கும் சகத் தொழிலாளி தினமும் சராசரியாக 20, 21 மரங்களை தினமும் பிளந்தான். இவனைக் காட்டிலும் குறைவான நேரம் உழைத்தும், இவனுக்கு முன்பாகவே வேலை முடித்து வீட்டிற்குச் சென்று விடுவான். சகத் தொழிலாளி என்ன தான் செய்கிறான் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று அவனுடன் சேர்ந்து மரம் வெட்டக் கிளம்பினான். அவன் ஒவ்வொரு 1/2 மணி நேரத்திற்கும் ஒருமுறை கோடாலியை கருங்கல்லில் நன்றாக இருபுறமும் தேய்த்துக் கூர்மைப் படுத்திக் கொண்டு பிளந்தான். இடை இடையே சில நேரங்கள் ஓய்வும் எடுத்துக் கொண்டு தான் வேலை செய்தான். கோடாலி கூர்மையாக இருக்கிறதா என்பதைப் பார்பதை மட்டும் முக்கியமான ஒரு வேலையாக வைத்திருந்தான்.

இந்தக் கதையின் மூலம் நாம் என்ன தெரிந்து கொள்கிறோம். மரம் வெட்டுவது என்பது நாம் செய்யும் தொழில். கோடாலி என்பது நாம் எப்படி வேலை பார்க்கிறோம் என்பது. கோடாலியை கூர்மைபடுத்துவது என்பது வேலையில் நம் புத்திசாலி தனத்தைப் பயன்படுத்துவது போன்றது. இது மாதிரி வேலையைத் தான் நம்மிடம் மற்றவர்கள் எதிர்பார்க்கிறார்கள் என்பதைப் புரிந்து கொண்டு செயல்பட வேண்டும். இப்படிப் புரிந்து கொண்டு செயல்படும் போது நிர்வாகம் எப்படி எதிர்ப்பார்க்கிறதோ அப்படிச்செயல்பட முடியும்.

நான் என்னுடைய வியாபாரத்தின் வளர்ச்சிக்காகக் கடன் பெறுவதற்காக எனது வங்கி மேனேஜரை சந்திந்தேன். அவர் தன்னுடைய வேலையை எல்லாம் கொஞ்ச நேரம் ஒதுக்கி வைத்து விட்டுத் தளர்வாக நான் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும் என்று கேட்டார். தொழில் சம்பந்தமாக கொஞ்ச நேரம் பேசிக் கொண்டு இருக்கும் போது "இன்று நான் ஒரு 20 கோடி ரூபாய் கடன்களை 30 நபர்களுக்கு வழங்க வேண்டி இருக்கிறது. அதற்கான பத்திரங்களை எல்லாம் பார்த்துப் பரிசோதித்து விட்டு கடன்களை இன்று மாலைக்குள் கொடுக்க வேண்டி இருக்கிறது" என்று கூறி 100 க்கும் மேற்பட்ட பத்திரங்களைக் காட்டினார். எனக்கு சற்று வியப்பாக இருந்தது "எப்படி சார் 100க்கும் மேற்பட்ட பத்திரங்களை இன்னும் இருக்கும் 4 மணி நேரத்தில் பார்த்து முடிப்பீர்கள்?" என்று கேட்டேன்.

அதற்கு அவர் "ஒரு பத்திரத்தில் எதை எதைப் பார்க்க வேண்டும், எப்படிப் பார்க்க வேண்டும் என்ற முக்கியமான இடங்களை எனக்குக் கீழே வேலை பார்ப்பவர்கள் சரி பார்த்து அதை பச்சைக் கலரில் வேறுபடுத்தி வைத்து விடுவார்கள். நான் அவர்கள் குறிப்பிட்ட அந்த இடத்தில் இருப்பவை சரியாக இருக்கிறதா என்பதை மட்டும் சரிபார்த்து விடுவேன். இப்படிச் சரிபார்த்தால் மட்டும் தான் என்னால் பலருக்கும் கடன் வழங்க முடியும். நான் ஒவ்வொரு பத்திரத்தையும் முழுவதுமாகப் படித்துக் கொண்டு இருந்தால் என்னால் ஒருவருக்குக் கூட கடன் கொடுக்க முடியாது." என்று கூறினார். "என்னுடைய கடன் கொடுக்கும் வேலைக்கு ஒரு பத்திரத்தில் எதை எதைப் பார்க்க வேண்டும் என்பதைத் தெளிவாக புரிந்து கொண்டு பார்த்தாலே பத்திரம் முழுவதும் பார்த்ததாகி விடும்" என்றார். இப்படித் தனது வங்கிக் கிளையின் பொறுப்புகளைத் தனது கீழ் பணிபுரிபவருடன் இணைந்து சிறப்பாக செயல்படுவதால் தான் எங்கள் கிளை மாநில அளவில் முதன்மையான கிளை வங்கியாகத் தொடர்ந்து 4 ஆண்டுகள் நீடிப்பதாகக் கூறினார்.

நாம் நம்முடைய வேலை சம்பந்தமான திறமைகளை வளர்த்துக் கொள்ள வேண்டும். நிர்வாகம் நம்மிடமிருந்து என்ன எதிர்பார்க்கிறது என்பதைப் புரிந்து கொண்டு செயல்பட வேண்டும். நான் இப்படித் தான் செயல்படுவேன் என்ற நம்முடைய மனத் தீர்மானங்களையும், பிடிவாதங்களையும் விட்டுவிட்டு நம்மிடம் நிர்வாகம் எந்த மாதிரி வேலையை எதிர்ப் பார்க்கிறது, அதற்கு நாம் இன்னும் என்ன கற்றுக் கொள்ள வேண்டுமோ தெரிந்து கொள்ள வேண்டுமோ அதைக் கற்றுக் கொண்டும், தெரிந்து கொண்டும் செயல்பட வேண்டும். நாமும் தொழில் சம்பந்தமாக நல்ல முன்னேற்றத்துடன் நிர்வாகத்திற்கு ஏற்ற சிறந்த பணியாளராக மாறிவிடுவோம்.

நம்முடைய வேலையை நன்றாக புரிந்துகொண்டு நிர்வாகம் நம்மிடம் என்ன எதிர்பார்க்கிறது என்பதைத் தெரிந்து செயல்பட்டால் போதும் வெற்றி நிச்சயம்.





**K.S. ஜீவமணி**
செல் : 97891-65555



# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்,

பகவத் பாதையில் பயணிக்கும் உங்கள் அனைவருக்கும் புத்தாண்டு நல் வாழ்த்துகளையும் பொங்கல் நல் வாழ்த்துகளையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

புத்தாண்டை கொண்டாடினாலும் ஞானப் புரிதல் உள்ள நமக்கு ஒவ்வொரு கணமும் புதிய கணமே.

நாம் அனைவரும் ஞானப் புரிதலால் அகத்தளவில் இன்ப துன்ப உணர்வுகளைத் துறந்து கணந்தோரும் புத்தம் புதிய நபராக பிரவகித்துக் கொண்டிருக்கிறோம். இப்பேறு ஸ்ரீ பகவத் ஐயா அவர்களால் நமக்கு கிடைக்கப் பெற்றுள்ளது.

இந்த உயர்ந்த நிலையே நம் கர்மாக்களைக் கடந்து வாழ்க்கை என்ற பெருங்கடலை நிறைவாகக் கடக்க வைக்கிறது.

நமக்கு எத்தனையோ இன்ப துன்ப அனுபவங்கள் ஏற்படலாம். அவை அனைத்தும் இப் பிறவிக்காக நம்மோடு கொண்டு வந்த பிராரப்தக் கர்மாவால் வந்தது. நம்முடைய பிராரப்தமும் நமக்கு என்னவென்று தெரியாது, நாம் சேர்த்து வைத்த சஞ்சித கர்மாவும் என்னவென்று தெரியாது. ஆனாலும் இவற்றை எதிர்கொள்ள இறைவன் கொடுத்துள்ள மிக உயர்ந்த வரம் மட்டும் நம் கைகளிலேயே உள்ளது. அது தான் ஆகாமிய கர்மா.

நமக்கு ஏற்படும் சூழ்நிலைகள் நமக்குச் சாதகமாகவும் இருக்கலாம், பாதகமாகவும் இருக்கலாம். அவை இன்பத்தைக் கொடுக்கலாம் அல்லது துன்பத்தைக் கொடுக்கலாம். இவை நம் கைகளில் இல்லை. அவை இயற்கையின் வசம் மட்டுமே உள்ளது. ஆனாலும் அவற்றை எதிர் கொள்ளும் சுதந்திரம் நமக்கு உண்டு. நம் செயல் நம் வசம் மட்டுமே உள்ளது. இதுதான் ஆகாமியம்.

நமக்கு எந்தச் சூழ்நிலை வேண்டுமானாலும் ஏற்படலாம். ஆனாலும் நாம் நம் அறிவுக்கு எட்டிய வரையில் அச் சூழ்நிலைக்குத் தகுந்த சரியான செயலையே, நல்ல செயலையே செய்ய வேண்டும். இதை ஒரு விரதமாகச் செய்வதே நிறைவான வாழ்க்கை வாழ்வதற்கான வழி.

ஞானப்புரிதலால் விடுதலை பெற்றவர்கள் இதனையும் தாண்டித் தங்களது செயல்களைக் காமியமற்ற செயலாக நிஷ்காமிய கர்மாவாக செய்து வருகிறார்கள்.

நமது பகவத் ஐயாவின் ஞானத் தெளிவை அனைவருக்கும் கொண்டு செல்ல வேண்டும் என்ற தன்னலமற்ற தொண்டே நிஷ்காமிய கர்மா தான்.

அந்த வகையில் பலரின் தொண்டால் ஐயாவின் ஞானப் புரிதல் நூல் வடிவமாகவும், ஒலி வடிவமாகவும் இணைய தளத்தில் Youtube வழியாகவும் பலரையும் சென்றடைந்த வண்ணம் உள்ளது.

தற்போது ஐயாவின் அனைத்து ஞான உரைகளும், உரையாடலும் வலைதளத்தில் தேடுவோர்களுக்கு கிடைத்து பயன் பெறும் வண்ணம் உள்ளது.

மேலும் ஐயாவின் நூல்கள் Flipkart-லும் விற்பனைக்கு வந்துள்ளது. தேவைப்படுவோர் Online-ல் பணம் செலுத்தி Flipkart மூலம் நூல்களைப் பெறலாம். இதனை முழு முயற்சி செய்து ஏற்பாடு செய்த திரு. **முரளி**, சென்னை, திரு. **பாபுலால்**, பெங்களூரு அவர்களுக்கு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் நமது ஸ்ரீ பகவத் பவனில் டிசம்பர் 30 ஆம் தேதியில் இருந்து ஜனவரி 1 ஆம் தேதி வரை நடைபெற்ற ஞானமுகாம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இது பலரின் நன்கொடைகளைக் கொண்டு இலவசமாக நடத்தப் பட்டது. இதில் புதிய அன்பர்கள் பலரும் கலந்து கொண்டு பயனடைந்தனர். இந்த ஞான முகாமில் மூத்த கர்நாடக இசைக் கலைஞர், **G.S.மணி** ஐயர் அவர்கள் குடும்பத்துடன் கலந்து கொண்டு உரையாற்றினார்கள். தனது 82 வருட தேடல் முடிவடைந்ததையும் ஐயா தனது எளிமையான வழியில் தனக்கு ஞானத் தெளிவு வழங்கியதையும் உற்சாகத்துடன் பகிர்ந்து கொண்டார்கள். ஞான முகாமைத் தொடர்ந்து ஸ்ரீ பகவத் மிஷனின் வளர்ச்சிப் பணிகள் பற்றிக் கலந்தாய்வு கூட்டம் நடைபெற்றது. இதில் சென்னை, பெங்களூரு மற்றும் வெவ்வேறு ஊர்களிலிருந்து வந்திருந்த நிர்வாகிகளும் ஆர்வலர்களும் கலந்து கொண்டனர்.

மேலும் ஜனவரி 3 ஆம் தேதி முதல் 6 ஆம் தேதி வரை திருவண்ணாமலையில் ஐயாவின் சத்சங்கம் ஆங்கிலத்தில் நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

ஐயா கொடுக்கும் ஞானத் தெளிவை உலகிற்கு எடுத்துச் செல்ல துணைபுரியும் அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

புரிந்து கொள்வோம்... புரிதலைப் பகிர்வோம்...




பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் வணக்கம்,

நமது ஸ்ரீ பகவத் பவன் இல்லத்தின் திறப்புவிழா சென்ற ஆண்டு ஜனவரி மாதம் 20 ஆம் தேதி நடத்தப்பட்டது. இந்த மாதம் 20 ஆம் தேதியோடு ஒரு வருடம் நிறைவடைகிறது. அந்தச் சமயத்தில் நிதிப் பற்றாக்குறையின் காரணமாக கட்டட வேலை 70% மட்டுமே முடிக்கப்பட்ட நிலையில் திறப்பு விழாவை நடத்தியிருக்கிறோம்.

அதன் பிறகு மீதி கட்டட வேலையை முடிப்பதற்காக நமது அன்பர்களிடம் இருந்து வட்டி இல்லாக் கடனாக ரூபாய் இருபது லட்சம் பெறப்பட்டு நிறைவாக முடிக்கப்பட்டது.

கட்டட வேலைகளை முழுமையாக முடிக்கப்பட்டாலும் அத்தியாவசியமாகச் செய்ய வேண்டிய உள்வேலைகள் **(Interior)** மட்டும் செய்யப்படாத நிலையிலேயே இதுவரை மூன்று ஞான முகாம்கள் இலவசமாக நடத்தப்பட்டுள்ளன.

நமது ஸ்ரீ பகவத் பவனில் நடத்தப்பட்ட ஞானமுகாம்களில் இதுவரை 300 அன்பர்கள் கலந்துகொண்டு பயன் அடைந்திருக்கிறார்கள். ஞான முகாமில் கலந்து கொள்ளும் புதிய அன்பர்களின் மனநிலை மூன்று நாட்களில் மலர்ச்சி அடைந்து தெளிவோடு மகிழ்ச்சியாக இருப்பதைக் கண்கூடாகக் காண முடிகிறது. இந்த 3 நாட்களில் நடக்கும் மாற்றங்கள் நமக்கு நிறைவைத் தருவதாக அமைந்திருக்கிறது. நாம் பெற்ற தெளிவு அனைவரும் அடைய வேண்டும் என்ற உயர்ந்த நோக்கில் தான் ஸ்ரீ பகவத் பவனில் நடைபெறும் அனைத்து ஞான முகாம்களையும் நமக்கு வரும் நன்கொடைகளை வைத்தே இலவசமாக நடத்தி வருகிறோம்.

மேலும் ஸ்ரீபகவத்பவனின் கட்டட நிதிக்காக பெறப்பட்ட வட்டியில்லாக் கடனை இன்னும் ஓர் ஆண்டுக்குள் செலுத்த வேண்டிய நிலையில் இதன் பராமரிப்புச் செலவும் சேர்ந்து கொண்டே போகிறது. இதனை எதிர்கொள்வது சற்றுச் சிரமமாக உள்ளது. ரூபாய்.25000/- ம் அதற்மேலும் நன்கொடையாக வழங்குபவர்களை ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனர்களாக இணைத்துக் கொண்டு வருகிறோம். அந்த வகையில் நமக்கு இன்னும் 72 நிறுவனர்கள் தேவைப்படும் நிலையில் ரூ.25000/- வழங்கி தங்களை நிறுவனர்களாக இணைத்துக் கொண்ட

திரு. **R.ராஜன்பாபு,** சென்னை.

திரு. **ஸ்ரீ வெங்கடேசன்,** புலியூர்.

திரு. **Dr. ரமேஷ்,** கரூர்.

திரு. **N. ராமசாமி,** திருச்சி.

திரு. **கார்த்திக் வெங்கடேசன்,** பெங்களூரு.

திரு. **S.சங்கரநாராயணன்,** கும்பகோணம்.

ஆகிய அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் உளமாந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் இது வரை நிறுவனர்களாக இணையாதவர்கள் வாய்ப்புள்ளவர்களாக இருக்கும் பட்சத்தில் நன்கொடைகளை வழங்கி நிறுவனர்களாக ஆவதோடு ஞானத் தெளிவை அனைவருக்கும் எடுத்துச் செல்லும் ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் இணைந்து கொள்ளுமாறு பணிவன்புடன் வேண்டுகிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.



கர்நாடக மூத்த இசைக் கலைஞர் G.S.மணி ஐயர் அவர்கள் குடும்பத்துடன் @ ஞான முகாம்



"ஆன்ம ஞான ரகசியம்" நூல் வெளியீடின் போது...



"ஆன்ம ஞான ரகசியம்" நூல் வெளியீடின் போது...



"ஆன்ம ஞான ரகசியம்" நூல் வெளியீடின் போது...



ஸ்ரீ பகவத் ஐயாவுடன் அன்பர்கள்



G.S. மணி ஐயருடன் கனடா ஜெயராமன்



திருவண்ணாமலையில் ஞான சத்சங்கத்தில் ஐயாவுடன் கலந்து கொண்டவர்கள்



திருவருட்சோலையில் ஐயாவுடன் அன்பர்கள்



ஐயாவுடன் அன்பர்கள் ஜருகு மலை செல்லும் போது



ஐயாவுடன் மூங்கில் தோட்டத்தில் அன்பர்கள்



ஸ்ரீ பகவத் ஐயாவுடன் அன்பர்கள்



ஸ்ரீ பகவத் ஐயாவுடன் அன்பர்கள்

# ஜென் கதை

## நிகழ்காலத்தில் வாழ்தல்

ஜென் கொள்கையின் அடிப்படை தத்துவமே நிகழ்காலத்தில் வாழ்வது தான். அப்படி ஒரு ஜென்துறவி நிகழ்காலத்தில் வாழ்வதையே வாழ்வின் உயர்ந்த இலக்காகக் கொண்டு செயல்பட்டார். நிகழ்காலத்தில் வாழ வேண்டும் என்பதற்காக ஆள்நடமாட்டம் இல்லாத அடர்ந்த மலைத் தொடருக்குத் தனிமையாகச் சென்று இயற்கையுடன் இணைந்து ரசித்துவிட்டு திரும்புவதை வழக்கமாகக் கொண்டு இருந்தார். அப்படி அவர் காட்டில் தனியாக இருக்கும் போதெல்லாம் தானும் இயற்கையின் ஒரு அங்கமாக இருப்பதாக எண்ணிக் கொண்டு மகிழ்வார்.

ஒரு முறை மலைச் சாரல் ஒன்றில் சென்று கொண்டிருந்தார். ஓரிடத்தில் ஒரு குன்றின் மீது சிறிய குடிசை இருப்பதைக் கண்டார். சுற்றிலும் நிறைய தூரத்திற்கு எந்த வீடும் இல்லை. அது போன்ற ஏகாந்தத்தில் குடிசை இருக்க வேண்டுமென்றால் அதில் வசிப்பது ஒரு துறவியாகத் தான் இருக்க வேண்டும் எண்றெண்ணிய அந்தத் துறவி அந்தக் குடிசையின் கதவைத் தட்டினார்.

கதவைத் திறந்ததோ ஒரு மூதாட்டி. அந்த ஜென் துறவியைப் பார்த்தவுடன் மூதாட்டி பக்தியுடன் தலை தாழ்த்தி வணக்கம் தெரிவித்து வரவேற்றார். அவருக்கு முகமலர்ச்சியோடு வரவேற்ற அந்த மூதாட்டியைக் கண்டு வியப்பு “அம்மா நீங்கள் இந்த மலையில் இந்த ஏகாந்தத்தில் என்ன செய்கிறீர்கள்?” என்று கேட்டார். “ஐயா நான் இங்கு தனியாகத் தான் வசிக்கிறேன். இங்கு யாரும் வருவதில்லை. இங்கு காய்கறிகள் வளர்த்து அருகே உள்ள கிராமங்களுக்குக் கொண்டு சென்று விற்கிறேன்,” என்றாள்.

அந்த மூதாட்டி அங்கு விளையும் காய்கறிகளைப் பற்றி மகிழ்ச்சியுடன் அவருக்கு விவரித்தார். மலைச் சாரலில் விளையும் காய்கறிகள் சத்தானவை என்றும் அந்தச் சத்தான காய்கறிகளைக் கிராம மக்களுக்கு விற்பதில் தனக்கு ஒரு நிறைவு இருக்கிறது என்றும் தெரிவித்தார். அவருக்கும் அந்த காய்கறிகளைக் கொண்டு, தான் சமைத்திருந்த எளிய உணவை அளித்து உபசரித்தார். தன் வீட்டுக்கு வந்த அபூர்வமான அந்த துறவியைக் கண்டு மூதாட்டிக்குப் பெருத்த மகிழ்ச்சி.

மகிழ்ச்சியையும் அன்பையும் கவனித்த துறவி உணவருந்தியபடியே கேட்டார். “வேலை இல்லாத பொழுது நீ எப்படிப் பொழுதைப் போக்குகிறாய்?”

“நான் சுவர்க்கோழிகளின் ஓசையையும் மழை, காற்றின் இசையையும் சூரியனின் உதயத்தையும் இரவில் நட்சத்திரத்தையும் நிலவழகையும் ரசித்து மகிழ்வேன். பொழுது தானாகப் போகிறது.” என்றாள்.

முதாட்டியின் அந்த பதில் துறவிக்கு பேசுவதற்கு வார்த்தைகள் அற்று மௌனமாக்கியது. துறவி அப்படியே மௌனமாக ஒரு வாழும் ஜென் குரு நாதரை இயற்கை தனக்குக் காட்டிக் கொடுத்ததாக எண்ணிக் கொண்டார். மூதாட்டி மேலும் “ஐயா நான் படிப்பறிவில்லாதவள், எனக்குப் புத்தரின் அறிவுரைகளைப் போதிப்பீர்களா?” என்று மிகுந்த அடக்கத்துடன் கேட்டாள்.

“விடுதலையில் வாழ்பவர்களுக்குப் போதிப்பதற்கு எதுவும் இல்லை. மேலும் ஜென்னில் வாழுகின்ற மனிதனுக்கு வேறெந்த போதனையும் தேவையில்லை.” என்றார் துறவி.

‘‘சாமி நீங்கள் என்ன கூறுகிறீர்கள் என்பது படிப்பறிவு இல்லாத தனக்கு புரியவில்லை” என்றாள் மூதாட்டி.

‘‘அம்மா! நீங்கள் தான் உண்மையில் நிகழ்காலத்தில் வாழ்கிறீர்கள். நீங்கள் எப்போதும் செய்கிற வேலையைச் செய்தாலே போதும். தனியாக உங்களுக்கு எந்தப் போதனையும் தேவையில்லை” என்றார் துறவி.

துறவி கூறியது எதுவும் புரியாமல் மௌனமாக துறவியை வணங்கிய படியே கும்பிட்ட வண்ணம் இருந்தார் மூதாட்டி.

துறவி மிகுந்த தளர்வுடன் மூதாட்டியை தலை வணங்கிய படி விடை பெற்றார்.

துறவி நடந்து கொண்டே இருந்த போது அவரது மனம் மட்டும் நிகழ்காலத்தில் வாழ்வது எப்படி என்பதை அந்த மூதாட்டி மூலம் இயற்கை உணர்த்தியதற்கு நன்றி தெரிவித்துக் கொண்டே இருந்தது.

**நிகழ்காலத்தில் வாழ்பவர்கள் இயற்கையுடன் இணைவதற்கு எந்த முயற்சியும் செய்யத் தேவையில்லை.**



Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555